யில்லாதவன் மலைச் சிகரத்தையடுத்ததொரு முழையிலே கடவுளைக் காணமாட்டான்.

கடவுள் எங்கிருக்கிறார்? எங்கும் இருக்கிறார், மலைச் சிகரத்திலே மாத்திரமா இருக்கிறார்? வீட்டிலும் இருக்கத்தான் செய்கிறார்.

" அங்கமே நின் வடிவமான சுகர்கூப்பிட நீ
எங்கும் 'ஏன்? ஏன்?' என்றதென்னே பராபரமே?"

என்று தாயுமானவர் பாடியிருக்கிறார்.

எங்ஙனமேனும், கடவுளை நேரில் பார்க்க வேண்டுமென்ற பேராவலுடன், சுகப் பிரம்ம ரிஷி, காட்டு வழியே, 'கடவுளே, கடவுளே யோ!' என்று கதறிக்கொண்டு போயினராம். அப்போது அங்கிருந்த மலை, சுனை, மேகம், நதி, ஓடை, மரம், செடி, கொடி, இலை, மலர், பறவை, விலங்கு--எல்லாப் பொருள்களும், 'ஏன்? ஏன்?' என்று கேட்டனவாம்.

எங்கும் கடவுள் நிறைந்திருக்கிறார். 'ஸர்வமிதம் ப்ரஹ்ம'—உலகமெல்லாம் கடவுள்மயம் என்று வேதம் சொல்லும் கொள்கையையே இக் கதை விளக்குகிறது.

இங்ஙனமாகையில், வீட்டிலிருந்து பந்துக்களுக்கும் உலகத்தாருக்கும் உபகாரம் செய்துகொண்டு, மனுஷ்ய இன்பங்களையெல்லாம் தானும் புஜித்துக் கொண்டு, கடவுளை நிரந்தரமாக உபாசனை செய்து, அதனால் மனிதத் துன்பங்களினின்றும் விடுபட்டு ஜீவன்முக்தராய் வாழ்தல் மேலான வழியா? அல்லது, காட்டிலே போய், உடம்பை விழலாக வற்றடித்து மடித்தும், புலி, பாம்பு முதலிய துஷ்ட ஜந்துக்களுக்கிரையாய் மடிந்தும், கடவுளைத் தேட முயலுதல் சிறந்த உபாயமா?

சூரியனைக் காணவில்லையென்று ஒருவன் தன் கைப் பெட்டிக்குள்ளே சோதனை போடுதலொக்குமன்றே, ஒருவன் கடவுளைக் காணவேண்டிக் காடுகளிலும் இருண்ட முழைகளிலும் புகுந்து வாழ்தல்?

'இல்லற மல்லது நல்லறமில்லை.'

தாயுமானஸ்வாமி, தாம் உயர்ந்த துறவு பூண்டிருந்த போதிலும், இதனைப் பின்வரும் பாட்டில் அங்கீகாரம் செய்கிறார். அதாவது, முற்றிலும் அங்கீகாரம் புரியவில்லை. துறவறத்தைக் காட்டிலும் இல்லறமே சிறந்ததென்று அவர் தெளிவுபட உரைத்துவிடவில்லை. முக்திக்கு இரண்டும் சம சாதனங்கள் என்கிறார். தாயுமானவர் சொல்லுகிறார் :—

"மத்த மத கரி முகிற் குல மென்ன நின்றிலகு
வாயிலுடன் மதி யகடு தோய்
மாட கூடச் சிகர மொய்த்த சந்திரகாந்த
மணி மேடை யுச்சிமீது
முத்தமிழ் முழக்கமுடன் முத்து நகையார்களொடு
முத்து முத் தாய்க் குலாவி
மோகத் திருந்து மென் ? யோகத்தினிலைநின்று
மூச்சைப் பிடித் தடக்கிக்
கைத்தல நகப்படை விரித்த புலி சிங்க மொடு
கரடி நுழை நூழை கொண்ட
கான மலை யுச்சியிற் குகை யூடிருந்து மென் ?
கர தலாமலக மென்ன
சத்த மற மோன நிலை பெற்றவர்களுய்வர் காண் !
ஜனகாதி துணிவி தன்றோ ?
சர்வ பரிபூரண அகண்ட தத்துவமான
சச்சி தானந்த சிவமே."

இதன் பொருள் யாதெனில் :—

'மதமேறிய யானைகள் மேகக் கூட்டங்களைப் போல் மலிந்து நிற்கும் வாயில்களையுடைய அரண்மனையில், சந்திரனை அளாவுவன போன்ற உயரமுடைய மாடங்களும் கூடங்களும் சிகரங்களும் சூழ்ந்திருப்ப, அவற்றிடையே நிலா விளையாட்டுக்காகச் சமைக்கப்பட்டிருக்கும் சந்திரகாந்த மேடைகளின் மேலே இனிய தமிழ்ப் பேச்சுக்கும் இனிய தமிழ்ப் பாட்டுக்கும் நாட்டியங்களுக்குமிடையே முத்தொளி வீசும் நகை புரிகின்ற மாதர்களுடனே முத்து முத்தாக உரையாடி முத்தமிட்டுக் குலாவிக்

காதல் நெறியில் இன்புற்றிருந்தாலென்ன ? அஃதன்றி, யோக வழியிலே சென்று மூச்சை அடக்கிக்கொண்டு ஆயுதங்களைப்போல் வலிய நகங்களையுடைய புலி, சிங்கம், கரடி முதலியன பதுங்கிக் கிடக்கும் பொந்துகளையுடைய காட்டுமலையுச்சியில் தாமரை பொந்தில் இருந்தாலென்ன? உள்ளங்கை நெல்லிக் கனிபோலே விளங்குவதோருண்மை கூறுகின்றோம். 'சலனமின்றி மனதிலே சாந்த நிலை பெற்றோர் உய்வார்' இஃதன்றோ ஜனகன் முதலியோரின் முடிபாவது ? எங்கும் நிறைவுற்றதாய்ப் பிரிக்கப்படாத மூலப் பொருளே ! அறிவும், உண்மையும், மகிழ்ச்சியும் ஆகிய கடவுளே !'

இங்ஙனம், இல்லறத்தைப் பந்தத்துக்கு அதாவது, தீராத துக்கத்துக்குக் காரணமென்றும், துறவறம் ஒன்றே மோக்ஷத்துக்கு 'சாதனமென்றும் கூறும் வேறு சில துறவிகளைப்போலே சொல்லாமல், இரண்டும் ஒருங்கே மோக்ஷத்துக்கு சமமான சாதனங்கள் என்று சொல்லியதே நமக்குப் பெரிய ஆறுதலாயிற்று. சம்சார சுகங்கள்கூட துன்பங்களுக்கே வழி காட்டுகின்றனவென்றும், ஆகவே எல்லா வகையினும் இகலோக வாழ்க்கை துன்பத்தைத் தவிர வேறில்லையென்றும் சொல்லிச் சில பிற்காலத்துத் துறவிகள், 'வீட்டையும் பெண்டு பிள்ளைகளையும் துறந்து விட்ட மாத்திரத்திலேயே ஒருவன் இகலோக வாழ்வைத் துறந்து விட்டானாகிறான்' என்ற பிழைக் கருத்துக் கொண்டவர்களாய், ஊர்தோறும் சுற்றிக்கொண்டு வீடு வாயில் சுற்றம் துணை இளமை எதும் இல்லாதவர்களாய்ப் பிச்சையெடுத்து வயிறு வளர்க்கிறார்கள். இக்கூட்டத்தாரின் வாழ்க்கை மகா பரிதாபகாமானது. இந்தக் கூட்டத்தாரில் இடையிடையே சிற்சில இடங்களில் சிற்சில மகான்கள் அளவற்ற கல்வியுடையோராகவும், அளவற்ற தெய்வ பக்தியுடையோராகவும், வரம்பற்ற ஜீவகாருண்யமுடையோராகவும் தோன்றுகிறார்கள். மற்றும், அவர்களில் பெரும்பான்மையோருக்கு ஒரு விதமான முக்தித் தேட்டம் இருக்கத்தான் செய்கிறது. எனினும், இவர்களில் மிகப் பெரிய மகான்கள்கூட, உலகத்தில் மானுடர் எய்தற்கரியதாகிய பரிபூரண வாழ்க்கை வாழ்ந்தனர் என்று கூறத்

தகாது. வேத காலத்தில் இந்தத் துறவு வழி ஹிந்துக்களுக்குள்ளே கிடையாது. வேத காலத்தில், சந்நியாசம் நமக்குள்ளே இருந்திருப்பதாக சுவாமி விவேகாநந்தர் சொல்லியிருக்கிறார். வசிஷ்டர் வாமதேவர் முதலிய வேத ரிஷிகள் அத்தனை பேரும் மணம் புரிந்துகொண்டு மனைவி மக்களுடனே இன்புற்று வாழ்ந்தனர். புலன்களை அடக்கியாளும் பொருட்டாக, அக்காலத்து ரிஷிகள் பிரம்மசாரிகளாக இருந்து நெடுங்காலம் பல்வகைக் கொடிய தவங்கள் செய்ததுண்டு. ஆனால், குறிப்பிட்ட காலம்வரை தவங்கள் செய்து முடிந்துப் பின்பு இல்வாழ்க்கையுட் புகுதலே மகரிஷிகளுக்குள் வழக்கமாக நடைபெற்று வந்தது. மஹா பாரதத்திலும் மற்றைப் பூர்வ புராணங்களிலும் வேதரிஷிகளைப் பற்றிய கதைகளும் சரித்திரங்களும் ஒரே சித்தாந்தமாக வேத ரிஷிகளுக்குத் துறவறம் என்ற விஷயமே இன்னதென்று தெரியாது என்ற என் வார்த்தையை நிலை நிறுத்துகின்றன. மேலும் சுவாமி விவேகாநந்தர் வேதத்தின் பிற்சேர்க்கைகளாகிய உபநிஷத்துக்களையே முக்கியமாகப் பயின்றவர். இந்த உபநிஷத்துக்கள் வேதாந்தம் என்ற பெயர் படைத்தன; அதாவது வேதத்தின் நிச்சயம். இவை வேதரிஷிகளால் சமைக்கப்பட்டனவல்ல. பிற்காலத்தவர்களால் சமைக்கப்பட்டன. ஸம்ஹிதைகள் என்று மந்திரங்கள் சொல்லப்படுவனவே உண்மையான வேதங்கள். அவையே ஹிந்து மதத்தின் வேர். அவையே வசிஷ்ட வாமதேவாதி தேவ ரிஷிகளின் கொள்கைகளைக் காட்டுவன. உபநிஷத்துக்கள் மந்திரங்களுக்கு விரோதமல்ல; அவற்றுக்கு சாஸ்திர முடிபு. அவற்றின் சிரோபூஷணம். ஆனால், பச்சை வேதமென்பது மந்திரம் அல்லது ஸம்ஹிதை எனப்படும் பகுதியேயாம்.

இந்த மந்திரங்கள் அல்லது ஸம்ஹிதைகள் பழைய பழைய மிகப் பழைய ஸம்ஸ்க்ருத பாஷையில் எழுதப்பட்டிருக்கின்றன. அதாவது, வேதங்களின் ஸம்ஸ்க்ருதம் மதுரைச் சங்கத்துக்கு முந்திய தமிழைப் போலவும் உபநிஷத்துக்களின் பாஷை சங்கத்துக்குப் பிந்திய தமிழைப் போலவும் இருக்கின்றன.

ஆனால், இந்த உபமானம் முற்றிலும் பொருத்தியதாகக் கூறலாகாது. இன்னும் அதை உள்ளபடி விளக்குமிடத்தே, ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள மற்றெல்லா நூல்களும் ஒரு பாஷை; வேதம் மாத்திரம்—அதாவது, ஸம்ஹிதை அல்லது மந்திரம் மாத்திரம்—தனியான பாஷையாக இருக்கிறது. இஃதொரு பெருவியப்பு அன்றோ? வேத ஸம்ஸ்க்ருதம் வேறெந்த நூலிலும் கிடையாது. உபநிஷத்தில் ஒரு சில மிகச் சில பகுதிகளில், விசேஷமாக வேத மந்திரங்களை மேற்கோளுரைக்குமிடத்தே வேத பாஷையைக் காணலாம். மற்றபடி உபநிஷத்து முழுதும் பிற்காலத்து பாஷையிலேயே சமைந்திருக்கிறது.

இங்ஙனமிருக்கப் பிற்காலத்து ஆசாரியர்களிலே சிலர் வேதத்தைக் கர்மகாண்டம் என்றும் அதனால் தாழ்ந்த படியைச் சேர்ந்ததென்றும் உபநிஷத்தே ஞானகாண்டம் என்றும் ஆதலால் அது வேதத்தைக் காட்டிலும் உயர்ந்ததென்று கருதுவாராயினர்.

இங்ஙனம் பிற்காலத்து ஆசாரியர்கள் நினைப்பதற்குண்டான காரணங்கள் பல. அவற்றுட் சிலவற்றை இங்கே தருகிறேன். முதலாவது காரணம் வேதபாஷை மிகவும் பழமைப்பட்டுப் போனபடியால் அதன் உண்மையான பொருளைக் கண்டு பிடித்தல் மிகவும் துர்லபமாய் விட்டது. நிருக்தம் என்ற வேத நிகண்டையும் பிராம்மணங்கள் என்று சொல்லப்படும் பகுதிகளிலே காணப்படும் வேத மந்திர விளக்கங்களையும் கற்றபின்னரே, ஒருவாறு வேத மந்திரங்களின் பொருளையறிதல் சாத்தியமாயிற்று. வேதம் பிரம்மாண்ட நூல். அதில் இத்தகைய ஆராய்ச்சி செய்வார் மிக மிகச் சிலரேயாவர். இப்போது வேதத்திற்கு விளக்குப்போலே நிற்கும் சாயனரென்ற வித்தியாரண்ய சங்கராசாரியரின் பாஷ்யம் பிராம்மணங்களையும் நிருக்தத்தையுமே ஆதாரமாகவுடையது. பிராம்மணங்களில் பெரும்பாலும் கற்பனைக் கதைகளும் கற்பிதப் பொருள்களுமே கூறப்பட்டிருக்கின்றன. நிருக்தத்திலோ என்றால் பெரும்பாலும் வேத பதங்களுக்குச் சரியான பொருளே கூறப்பட்டிருக்கிறது. ஆனால், பல இடங்களில் அதன் தாது நிச்சயங்கள் மிகவும் சம்சயத்துக்கு

இடமாவதும் சில இடங்களில் அதன் பொருட்கோளே மாறுபட்டதாகவும் இருக்கிறது.

வேத மந்திரங்களுக்குச் சரியான அர்த்தம் கண்டு பிடிக்க வேண்டுமென்று தற்காலத்தில் ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் அநேக பண்டிதர்கள் மிகவும் சிரமப்படுகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்பே காலஞ் சென்றவராகிய சுவாமி தயாநந்த ஸரஸ்வதி வேதத்துக்குத் தாம் எப்போதுமில்லாத புதிய அர்த்தமொன்று கற்பித்து அதற்கிணங்க, 'ஆரிய சமாஜம்' என்ற புது மதக் கொள்கையொன்று ஸ்தாபித்தார்.

ஆனல், சிற்சில பதங்களுக்கு சாயணாசாரியர் சொல்லும் உரை பிரத்தியக்ஷமாகப் பிழையென்று தோன்றினும், பொதுப்படையாகச் சொல்லுமிடத்தே தற்காலத்து ஹிந்து வைதிகர்களால் அங்கீகாரம் செய்யப்பட்டிருக்கும் சாயண பாஷ்யமே பூர்வ வியாக்கியானங்களுக்கு விரோதமில்லாமலும், தெளிவாகவும், உண்மையாகவும் அமைந்திருக்கிறது.

சாயண பாஷ்யமில்லாவிட்டால், வேதம் ஹிந்து ஜாதிக்குப் பயன்படாமலே போயிருக்கும். சரியான சமயத்தில் சாயணர் வேதங்களுக்கு பாஷ்யம் எழுதி வைத்தார். எனினும், சாயணாசாரியர் கூடத் தம்முடைய குருக்களைப்போலவே வேதம் கர்ம நூலென்று கருதி விட்டார். அதனால், அது ஹிந்து மதத்துக்கு ஆதிவேர் என்பதை இந்த ஆசாரியர்களால் மறுக்க முடியாவிடினும், அதற்கு ஞானநெறியில் எவ்வித பிரமாணமுமில்லை யென்று அவர்கள் தவறுக எண்ணும்படி நேர்ந்து விட்டது. ஏனென்றால், வேதத்தைக் கர்மங்களைப் போற்றுகிற நூலாகக் கருதிய இவர்கள் கர்மங்களென்ற இடத்தே யாகங்களைக் கருதிக் கூறினர். அதாவது, யாகங்களுக்கு மாத்திரம் உபயோகப்படும் நூலாக எண்ணி, கர்மங்கள் என்றால் யாகங்களெனப் பொருள் கொண்டு இவர்கள் வேதத்தைக் கர்ம காண்டம் என்றார்கள்.

ஷை யாகங்களோ பெரும்பாலும் பசு வதைகளும், குதிரைக் கொலைகளும், ஆட்டுக் கொலைகளும் முக்கியமாகப்

பாராட்டிய கொலைச் சடங்குகள். இவ்விதமான கொலை களைச் செய்தல் மோக்ஷத்துக்கு வழியன்று போலி வைதி கரைப் பழிசூட்டி, அந்தக் கொலைச் சடங்குகளால் மனிதன் நரகத்துக்குத்தான் போவான் என்பதை நிலை நாட்டிய புத்த பகவானும் அவருடைய மதத்தைத் தழுவிய அரசர் களும் இந்தியாவில் யாகத் தொழிலுக்கு மிகவும் இகழ்ச்சி யேற்படுத்திவிட்டார்கள். அந்தத் தருணத்தில், புத்த மதத்தை வென்று ஹிந்து தர்மத்தை நிலைநாட்ட, சங்க ராச்சாரியார் அவதரித்தார். அவர் புத்தமதக் கருத்துக் களைப் பெரும்பாலும் ருசி கண்டு சுவைத்துத் தம்முடைய வேதாந்தத்துக்கு ஆதாரங்களாகச் செய்து கொண்டனர். ஷண்மத ஸ்தாபகாசாரியாராய், சைவம் வைஷ்ணவம் முதலிய ஆறு கிளைகளையும் வேதாந்தமாகிய வேரையு முடைய ஹிந்து மதம் என்ற அற்புத விருக்ஷத்தை ஸ்ரீ சங்கராசாரியர் தமது அபாரமான ஞானத் திறமையாலும் கல்வி வலிமையாலும் மீள உயிர்ப்பித்து அதற்கு அழியாத சக்தி ஏற்படுத்தி வைத்துவிட்டுப் போனார். தம்மாலே வெட்டுண்ட புத்த மதம் என்ற விருக்ஷத்தின் கிளைகள் பலவற்றை ஹிந்து தர்மமாகிய மரத்துக்கு நல்ல வளர்ச்சி யுண்டாகும்படி ஒட்டுவாகச் செய்து போட்டார். இங்ஙனம் புத்த மதக் கொள்கைகள் பலவற்றை ஹிந்து தர்மத்துக்கு ஆதாரமாகச் சேர்த்துக்கொண்டது பற்றியே, சங்கராச் சாரியரை அவருடைய எதிர்க்கட்சியார் பலர் 'பிரச்சன்ன பௌத்தர்' (மறைவுபட்ட பௌத்தர்) என்று சொன் னார்கள். எனினும் அவர் ஹிந்து தர்மத்துக்குச் செய்த பேருபகாரத்துக்காக ஹிந்துக்களிலே பெரும்பாலோர் அவரைப் பரமசிவனுடைய அவதாரமாகக் கருதிப் போற்றினார்கள்.

பௌத்த மதமே துறவு நெறியை உலகத்தில் புகுத் திற்று. அதற்கு முன் அங்கங்கே சில சில மனிதர் துறவி களாகவும் சில சில இடங்களில் சிலர் துறவிக் கூட்டத் தாராகவும் இருந்தனர்.

துறவிகளின் மடங்களை இத்தனை தாராளமாகவும், இத்தனை வலிமையுடையனவாகவும் செய்ய வழிகாட்டியது பௌத்த மதம். எங்கு பார்த்தாலும் இந்தியாவை அம்

மதம் ஒரே சந்நியாசி வெள்ளமாகச் சமைத்துவிட்டது. பாரத தேசத்தை அந்த மதம் ஒரு பெரிய மடமாக்கி வைத்து விட்டது. ராஜா, மந்திரி, குடி, படை—எல்லாம் மடத்துக்குச் சார்பிடங்கள். துறவிகளுக்குச் சரியான போஜனம் முதலிய உபசாரங்கள் நடத்துவதே மனித நாகரிகத்தின் உயர் நோக்கமாகக் கருதப்பட்டது. துறவிகள் தான் முக்கியமான ஜனங்கள்! மற்ற ஜனங்களெல்லாரும் அவர்களுக்குப் பரிவாரம்! மடந்தான் பிரதானம்; ராஜ்யம் அதற்குச் சாதனம்.

பாரத தேசத்தில் புத்த மதம் ஜீவகாருண்யம் சர்வ ஜன சமத்துவம் என்ற இரண்டு தர்மங்களையும் நெடுந் தூரம் வேன்றும்படி செய்தது. ஆனால், உலக வாழ்க்கையாகிய ஜகத்தின் ஒளி போன்றவளாகிய பத்தினியைத் துறந்தவர்களை மேலோர் என்று வைத்து, அவர்களுக்குக் கீழே மற்ற உலகத்தை அடக்கி வைத்து உலகமெல்லாம் பொய்மயம் என்றும் துக்கமயம் என்றும் பிதற்றிக்கொண்டு வாழ்நாள் கழிப்பதே ஞான நெறியாக ஏற்படுத்தி, மனித நாகரிகத்தை நாசஞ் செய்ய முயன்றதாகிய குற்றம் புத்த மதத்துக்கு உண்டு. அதை நல்ல வேளையாக இந்தியா உதறி தள்ளிவிட்டது. பின்னிட்டு புத்த தர்மத்தின் வாய்ப்பட்ட பர்மா முதலிய தேசங்களிலும் புத்த மதம் இங்ஙனமே மடத்தை வரம்பு மீறி உயர்த்தி மனித நாகரிகத்தை அழித்துக்கொண்டுதான் வந்திருக்கிறது. பிற்காலத்தில் பௌத்த வழியைத் தழுவி பலமான மடஸ்தாபனங்கள் செய்த ரோமன் கத்தோலிக்க மதத்திலும் குருக்களுடைய சக்தி மிஞ்சிப் போய் மனித நாகரிகத்துக்குப் பேராபத்து விளையும்போலிருந்தது. அதை ஐரோப்பிய தேசத்தார்கள் பல புரட்சிகளாலும், பெருங் கலகங்களாலும் யுத்தங்களாலும் எதிர்த்து வென்றனர். அது முதல் ஐரோப்பாவில் மடாதிபதிகளுக்கு ராஜ்யத்தின் மீதிருந்த செல்வாக்கும் அதிகாரமும் நாளுக்கு நாள் குறைந்துகொண்டு வருகின்றன. இது நிற்க.

ஹிந்து தர்மம் புத்த மதத்தை ஜயிக்கவேயில்லையென்றும், பௌத்த மதமே ஹிந்து மதத்தை ஜெயித்துவிட்டதாகவும் சில மாதங்களின் முன்பு காரைக்குடியில்

ஒரு நண்பர் என்னிடம் தர்க்கித்தார். சரித்திரத்திலும், பிரத்யக்ஷத்திலும் ஜைன பௌத்த மதமழிந்து ஹிந்து மதம் வெற்றி பெற்று நிற்கும் செய்தி விளங்குகையில், பட்டப் பகலை இரவென்று கூறுதல் போல் ஒரு காலைக்குடி நண்பர் சொல்லியது பச்சைப் பொய்யை இங்கெடுத்துச் சொல்ல வந்த முகாந்தரம் யாதெனில் :— 'அவர் சொல்லியது பச்சைப் பொய்யன்று அதில் சிறிதளவு உண்மையும் கலந்திருக்கிறது. எங்ஙனமெனில், பௌத்த மார்க்கத்தைக் களைந்தெறிந்து மிஞ்சி நின்ற ஹிந்து மதம் பல அம்சங்களில் பௌத்த மதக் கருத்துக்களை முழுமை யாகவும் பல அம்சங்களிற் சற்றே மாற்றியும் தன்னுள்ளே சேர்த்துக்கொண்டுவிட்டது. ஆகவே, பௌத்த மதம் இந்நாட்டில் இருந்த இடந் தடம் தெரியாமல் மண்ணோடு மண்ணாய் மறைந்து போகவில்லை. அதன் கொள்கைகளில் பல ஹிந்து மதக் கொள்கைகளுடன் கலந்து இந்நாட்டில் வழங்கி வருகின்றன.

இந்தச் செய்தியையே அந்தக் காலைக்குடி நண்பர் மிகவும அதிசயோக்தியாக மேற்கண்டவாறு பச்சைப் பொய் வடிவத்தில் கூறினர். புனர் ஜன்மக் கொள்கை, புலால் மறுத்தல்—இவை இரண்டுமே பௌத்த மதத்திலிருந்து ஹிந்து மதத்துக்குள் நுழைந்த கொள்கைகளில் முக்கியமானவை என்று கருதப்படுகின்றன. ஆனால், இக்கொள்கைகள் பௌத்த மதத்திலிருந்துதான் ஹிந்து மதத்தில் புகுந்தனவென்று கூறுவதற்கு பலமான ஆதாரங்களில்லை. புனர் ஜன்மக் கொள்கை பூர்வ புராணங்களிலேயே இருந்தது. பௌத்த மதம் அக்கொள்கையை அறிஞர் கண்டு நகைக்கத் தக்கபடியாக, வரம்பு மீறி வற்புறுத்திற்று. பிற்கால ஹிந்து மதத்தில் அக்கொள்கை அளவுக்கு மிஞ்சி, நிரர்த்தகமாக ஏறிப்போய் இப்போது ஹிந்து நம்பிக்கையிலுள்ள குறைகளிலொன்றாக இயல்கிறது. சாதாரணமாக ஒருவனுக்குத் தலை நோவு வந்தாலுங்கூட, அதற்குக் காரணம், 'முதல் நாள் பசியில்லாமல் உண்டதோ. அளவு மீறி தூக்கம் விழித்ததோ. மிகக் குளிர்ந்த அல்லது மிக அசுத்தமான நீரில் ஸ்நானம் செய்ததோ' என்பதை ஆராயு

முன்பாகவே, அது பூர்வ ஜன்மத்தின் கர்மப் பயனென்று ஹிந்துக்களிலே பாமரர் கருதக்கூடிய நிலைமை வந்து விட்டது. உலகத்து வியாபார நிலைமையையும் பொருள் வழங்கும் முறைகளையும் மனித தந்திரத்தால் மாற்றி விடலாம் என்பதும், அங்ஙனம் மாற்றுமிடத்தே செல்வ மிகுதியாலும் செல்வக் குறைவாலும் மனிதர்களுக்குள்ளே ஏற்படும் கஷ்டங்களையும், அவமானங்களையும், பசிகளையும் மரணங்களையும் நீக்கிவிடக்கூடும் என்பதும் தற்காலத்து ஹிந்துக்களிலே பலருக்குத் தோன்றவே இடமில்லை. பிறர் சொல்லியபோதிலும் அது அவர்களுக்கு அர்த்தமாவது சிரமம். ஏனென்றால் பண விஷயத்தில் ஏற்பட்ட பயங்கரமான பேதங்களையும், தாரதம்மியங்களையும், பாரபக்ஷங்களையுங் கண்டு, அதற்கு நிவாரணம் தேட வழி தெரியாத இடத்திலேதான், பெரும்பாலும் இந்தப் பூர்வ ஜன்ம கர்ம விஷயம் விசேஷமாக பிரஸ்தாபத்துக்கு வருகிறது. அற்பாயுள், நீண்ட ஆயுள், நோய், நோயின்மை, அழகு, அழகின்மை, பாடத் தெரிதல், அது தெரியாமை, படிப்புத் தெரிதல், அது தெரியாமை—முதலிய எல்லா பேதங்களுக்கும் பூர்வ ஜன்மத்தின் புண்யபாவச் செயல்களையே முகாந்தரமாகக் காட்டினார்களெனினும், பண விஷயமான வேறுபாடுகளே இவையெல்லாவற்றைக் காட்டிலும் மனிதர்களுக்கு உள்ளக் கொதிப்பையும் நம்பிக்கைக் கேட்டையும் விளைத்து, அவர்களை இந்த ஜன்மத்தின் துக்கங்களுக்குப் பூர்வ ஜன்மத்திலே காரணந் தேடுவதும் அடுத்த ஜன்மத்தில் பரிகாரந் தேடுவதுமாகிய விநோதத் தொழிலிலே தூண்டின.

எனவே, இந்தப் பூர்வ ஜன்ம சித்தாந்தத்தை பௌத்த மதம் நமது தேசத்தில் ஊர்ஜிதப்படுத்தியது பற்றி நாம் அதற்கு அதிக நன்றி செலுத்த இடமில்லை.

பௌத்த மதத்தால் நாம் அடைந்த நன்மைகளிலே உண்மையான நன்மை ஒன்றுதான். அதாவது, விக்கிர காராதனையை பௌத்த மதம் ஊர்ஜிதப்படுத்திற்று. புதிதாக உண்டாக்கவில்லை. ஏற்கனவேயிருந்த வழக்கத்தை மிகவும் விஸ்தாரமாக்கி ஊர்ஜிதப்படுத்திற்று.

பௌத்தர்கள் மனிதருக்கேற்படுத்திய சிலைகளை நம்மவர் தம்முடைய அற்புத ஞான சக்தியின் விரிவாலும் கற்பனை சக்தியின் தெளிவாலும் தேவர்களுக்குச் சமைத்துக் கொண்டனர். தேவர்களைச் சிலைகளில் வைத்து வணங்குதல் முக்திக்கு மகத்தான சாதனங்களிலொன்றாம். ஆனால், உண்மையான பக்தியுடன் வணங்கவேண்டும்.

இனி, புத்த மதம் இழைத்த பெருந் தீங்கு யாதெனிலோ, இடைக்காலத்து மாயாவாதத்தை நம்முள்ளே எழுப்பிவிட்டது உபநிஷத்துக்களிலும் வேதத்திலும் 'மாயா' என்ற சொல் பராசக்தியைக் குறிப்பது. இடைக் காலத்தில் மாயை பொய்யென்றதொரு வாதம் உண்டாயிற்று. இதனால், 'ஜகத் பொய்; தேவர்கள் பொய்; சூரிய நக்ஷத்திராதிகள் பொய்; பஞ்ச பூதம் பொய்; பஞ்சேந்திரியம் பொய்; மனம் பொய்; சைதந்யம் மாத்திரம் மெய்; ஆதலால், இந்த உலகத்துக் கடமைகளெல்லாம் எறிந்துவிடத் தக்கன. இதன் இன்பங்களெல்லாம் துறந்துவிடத் தக்கன' என்றதொரு வாதம் எழுந்தது. 'இவ்வுலக இன்பங்களெல்லாம் அசாசுவாதம்; துன்பங்கள் சாசுவதம். இத்தகைய உலகத்தில் நாம் எந்த இன்பங்களையுந் தேடப் புகுதல் மடமையாகும். எனவே, எந்தக் கடமைகளையுஞ் செய்யப் புகுதல் வீண் சிரமமாகும்' என்ற கட்சி ஏற்பட்டது.

ஆனால், இவர்கள் எல்லா இன்பங்களையுந் துறந்து விட்டதாக நடிக்கிறார்களேயன்றி, இவர்கள் அங்ஙனம் உண்மையிலே துறக்கவில்லை. இவ்வுலகத்தில் ஜீவர்கள் எல்லா இன்பங்களையும் துறப்பது சாத்தியமுமில்லை. கடமைகளைத் துறந்துவிட்டுச் சோம்பேறிகளாகத் திரிதல் சாத்தியம்; மிக சுலபமுங்கூட. இந்தச் சோம்பேறித்தனத்தை ஒரு பெரிய சுகமாகக் கருதியே அனேகர் துறவு பூணுகிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது.

இவர்கள் கடமைகளைத் துறந்தனரேயன்றி இன்பங்களைத் துறக்கவில்லை. உணவின்பத்தைத் துறந்து விட்டார்களா? சோறில்லாவிட்டால் உயிர் போய்விடுமே என்றால்,

அப்போது நீங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டுத் தொழில் செய்து ஜீவிக்க வேண்டும். ஆடையின்பத்தை இவர்கள் துறக்கவில்லை ஸ்நானவின்பத்தைத் துறக்கவில்லை. தூக்கவின்பத்தைத் துறக்கவில்லை ; கல்வியின்பத்தைத் துறக்கவில்லை ; புகழின்பத்தைத் துறக்கவில்லை. உயிரின்பத்தைத் துறக்கவில்லை. வாதின்பத்தைத் துறக்கவில்லை. அவர்களில் முக்கியஸ்தர்களாகிய மடாதிபதிகள் பணவின்பத்தையுந் துறக்கவில்லை. இவர்களுடைய போலி வேதாந்தத்தை அழிக்கும் பொருட்டாகவே பகவத் கீதை எழுதப்பட்டது.

உலகமெல்லாம் கடவுள் மயம் என்ற உண்மையான வேதாந்தத்தைக் கீதை ஆதாரமாக உடையது. மாயை பொய்யில்லை. பொய் தோன்றுது. பின் மாறுகிறதே யெனில், மாறுதல் மாயையின் இயற்கை. மாயை பொய்யில்லை. அது கடவுளின் திருமேனி. இங்கு தீமைகள் வென்றொழித்தற்குரியன. நன்மைகள் செய்தற்கும் எய்துதற்கும் உரியன. சரணாகதியால்—கடவுளிடம் தீராத மாறாத பக்தியால்—யோகத்தை எய்துவீர்கள். எல்லா ஜீவர்களையும் சமமாகக் கருதக் கடவீர்கள். அதனால், விடுதலையடைவீர்கள். சத்திய விரதத்தால் ஆனந்தத்தை அடைவீர்கள். இல்லறத் தூய்மையால் ஈசத் தன்மை அடைவீர்கள்.

இந்த மகத்தான உண்மையையே கீதை உபதேசிக்கிறது.



# பகவத் கீதை

குருக்ஷேத்திரப் போர் நடக்கையிலே கண்ணில்லாத திருதராஷ்டிர ராஜன் தான் அங்கு செல்லக் கூடாமையால் அஸ்தினாபுரத்தில் தனது அரண்மனையில் இருந்து கொண்டே போர்க்களத்தில் நடக்கும் செய்திகளைத் தனக்குச் சொல்லும்படி சஞ்ஜயன் என்ற மந்திரியை நியமிக்கிறான். வேத வியாசரருளால் ஞானதிருஷ்டி பெற்றவனாய் சஞ்ஜயன் போர்க்களத்துச் செய்திகளை திருதராஷ்டிரனுக்குச் சொல்லுகிறான். கண்ணனுக்கும் பார்த்தனுக்கும் போர்த் தொடக்கத்தில் நிகழ்ந்த சம்பாஷணையை சஞ்ஜயன் கூறுவதாகச் சமைக்கப்பட்ட பகவத் கீதைக்கு இந்த முதலத்தியாயம் பாயிரமாகக் கருதத்தகும்.

திருதராஷ்டிரன் சொல்லுகிறான் :—

சஞ்ஜயா, அற நிலமாகிய குரு நிலத்தில் போர் செய்ய விரும்பித் திரண்ட நம்மவர்களும் பாண்டவரும் என்ன செய்தனர் ? 1

சஞ்ஜயன் சொல்லுகிறான் :—

அப்போது துரியோதனராஜன் அணிவகுத்து நின்ற பாண்டவர் படையைப் பார்த்துவிட்டு, ஆசாரிய(துரோண)னிடம் போய் (ப் பின் வரும்) வார்த்தை சொல்லலாயினன் :— 2

"குருவே, துருபதன் மகனும் நின் சீடனுமாகிய நிபுணனால் வகுப்புற்ற இப்பெரிய பாண்டவப் படையைப் பார் ! 3

இங்கு சூரரும் பெரிய வில்லாளிகளும் போரில் வீமனையும் பார்த்தனையும் நிகர்த்தவருமாகிய பலர் இருக்

கிறார்கள் — யுயுதானன்; விராடன்; மகாரதனாகிய துருபதன்; 4

திருஷ்டகேது; சேகிதானன்; வீரியமுடைய காசிராஜன்; புருஜித்; குந்தி போஜன்; மனிதரேறாகிய சைவியன். 5

வலிமை மிக்க யுதாமந்யு; உத்தமௌஜா என்ற வீரன்; சுபத்தரை மகன்; திரௌபதி மக்கள்; எல்லோருமே மகாரதர். 6

இனி, எனது படைக்கு நாயகராய்; நம்முள்ளே சிறந்தோரையுந் தெரிந்து கொள். இருபிறப்பாளரில் மேம்பட்டவனே, குறிப்பின் பொருட்டாக அவர்களை உனக்குச் சொல்லுகிறேன். 7

நீ; பீஷ்மன்; கர்ணன்; பொருநர் கூட்டத்தை வெல்வோனாகிய கிருபன்; அசுவத்தாமன்; விகர்ணன்; சோமதத்தன் மகன்; 8

இன்னும் வேறு பல சூரர்; என் பொருட்டு வாழ்க்கையைத் துறந்தோர்; பலவிதமான ஆயுதங்களும் அம்புகளுமுடையோர்; எல்லோருமே போரில் நிபுணர். 9

(எனினும்) பீஷ்மனால் காக்கப்படும் நமது படை (கண்ணுக்கு) நிறைந்திருக்கவில்லை. வீமனால் காக்கப்படும் இவர்களுடைய படையோ நிறைந்திருக்கிறது. 10

நீங்களனைவரும் வகுப்புகளின்படி எல்லா இடங்களிலும் நின்றுகொண்டு பீஷ்மனையே காக்கக் கடவீர்." 11

(அப்போது) துரியோதனனுக்கு மகிழ்ச்சி விளைவிக்குமாறு கீர்த்திமிக்க கௌரவர் கிழவனாகிய பாட்டன் உயர்ந்த குரலில் சிங்க நாதம் புரிந்து சங்கை யூதினான். 12

அப்பால், சங்குகளும், பேரிகைகளும், தம்பட்டங் களும், பறைகளும், கொம்புகளும் திடீரென ஒலித்தன, அஃது பேரோசையாயிற்று. 13

பின்பு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய பெருந் தேரில் நின்ற மாதவனும் பார்த்தனும் (தம்முடைய) தேவச் சங்குகளை யூதினர். 14

கண்ணன் பாஞ்சஜன்யத்தை யூதினான்; தேவ தத்தம் என்ற சங்கை தனஞ்ஜெயன் ஒலித்தான்; அஞ்சுதற்குரிய செயல்களையுடைய ஓநாய் வயிற்று வீமன் பௌண்ட்ரம் என்ற பெருஞ்சங்கை யூதினான். 15

குந்தி மகனாகிய யுதிஷ்டிர ராஜன் அநந்த விஜயம் என்ற சங்கையும், நகுலனும் சகதேவனும் (முறையே) சுகோஷம், மணிபுஷ்பகம் என்ற சங்குகளையும் ஊதினர். 16

வில்லாளிகளில் மிகச் சிறந்த காசிராஜனும், மகாரத னாகிய சிகண்டியும், திருஷ்டத்யும்நனும், விராடனும், வெல்லப்படாத ஸாத்தியகியும், 17

துருபதனும், துரோபதை மக்களும், பெருந் தோளுடையவனாகிய சுபத்திரை மகனும், தனித்தனியே தத்தம் சங்குகளை ஒலித்தனர், *பூமிக்குத் தலைவனே! 18

அந்தப் பெருமுழக்கம் வானையும் மண்ணையும் உடனொலிக்கச் செய்வதாய், திருதராஷ்டிரக் கூட்டத்தாரின் நெஞ்சுகளைப் பிளந்தது. 19

அப்பால், (இரு திறத்தும்) அம்புகள் பறக்கத் தலைப் பட்டன. அப்போது குரங்குக் கொடியுயர்த்த பார்த்தன்

*இங்கு பூமிக்குத் தலைவனென்று திருதராஷ்டிரனை கதை சொல்லி வரும் சஞ்ஜயன் விளிக்கிறான்.

திருதராஷ்டிரக் கூட்டத்தாரை நோக்கி வில்லை யேந்திக் கொண்டு. 20

கண்ணனைப் பார்த்துச் சொல்லுகிறன் :

அர்ஜுனன் சொல்லுகிறன் :—

"அச்சுதா, படைகளிரண்டுக்கும் நடுவே என் தேரைக் கொண்டு நிறுத்துக" என்று. (கேளாய், திருதராஷ்டிர ராஜனே !) 21

"சமரை விரும்பி நிற்கும் இவர்களை நான் பார்க்க வேண்டும். இந்தப் போர்த் தொடக்கத்தில் என்னோடு போர் செய்யக் கடவோர் யார் ? 22

"கெட்ட மதிகொண்ட துரியோதனனுக்குப் பிரீதி செய்யும் வண்ணம், இங்கு போர் செய்யத் திரண்டு நிற்போரை நான் காணவேண்டும் ?" என்றான். 23

சஞ்ஜயன் சொல்லிக்கொண்டு வருகிறன்—

(கேளாய்) பாரத நாட்டரசே, இங்ஙனம் பார்த்தனுரைத்தது கேட்ட கண்ணன் மிகவும் மேன்மை கொண்ட அத்தேரை இரண்டு படைகளுக்குமிடையே கொண்டு நிறுத்தினன். 24

பீஷ்மனுக்கும் துரோணனுக்கும் மற்றெல்லா வேந்தருக்குமெதிரே தேரை நிறுத்திக்கொண்டு :—"பார்த்தா ! இங்கு கூடி நிற்கும் கௌரவரைப் பார் !" என்றான். 25

அங்கு பார்த்தன் தன்னுடைய தந்தையரும், பாட்டன்மாரும், குருக்களும், மாதுலரும், அண்ணன் தம்பிகளும், மக்களும், பேரரும், தோழர்களும் நிற்பது கண்டான். 26

அங்ஙனமே மாமன்மாரும், நண்பர்களும் உறவினரெல்லாரும் இரண்டு படைகளிலும் நிற்கக் கண்டு, குந்தி மகனுகிய அப் பார்த்தன்—

மிகவும் இரக்கமுற்றவனுய்த் துயருடன் சொல்லுகிருன் : 27

அர்ஜுனன் சொல்லுகிருன் :—

“கண்ணு, போர் செய்ய வேண்டி இங்கு திரண்டு நிற்கும் சுற்றத்தார்களைக் கண்டு, 28

என் அவயவங்கள் சோர்கின்றன. என் வாய் உலர்கிறது. என்னுடம்பு நடுங்குகிறது. மயிர் சிலிர்க்கிறது. 29

*காண்டீவம் கையிலிருந்து நழுவுகிறது. உடம்பில் எரிச்சலுண்டாகிறது. என்னல் நிற்க முடியவில்லை. என் மனம் சுழலுகிறது. 30

கேசவா, விபரீதமான சகுனங்கள் பல காண்கிறேன். போரிலே சுற்றத்தார்களை மடிப்பதில் எனக்கு நன்மை தோன்றவில்லை. 31

கண்ணு, நான் வெற்றியை விரும்புகிலேன் ; ராஜ்யத்தையும், இன்பங்களையும் வேண்டுகிலேன் கோவிந்தா. நமக்கு ராஜ்யத்தால் ஆவதென் ? இன்பங்களால் ஆவதென் ? உயிர் வாழ்க்கையாலேனு மாவதென்னே.” 32

யாவர் பொருட்டு நாம் ராஜ்யத்தையும் போகங்களையும் இன்பங்களையும் விரும்புகிருேமோ, அவர்கள் உயிரையும் செல்வங்களையும் துறந்தோராய் இங்கு வந்து நிற்கிருர்கள். 33

*காண்டீவமென்பது அர்ஜுனனுடைய வில்லின் பெயர்.

குருக்களும், தந்தையரும், மக்களும், பாட்டன்மாரும், மாதுலரும், மாமன்மாரும், பேரரும், மைத்துனரும், சம்பந்திகளும் (இங்குளர்.) 34

மதுசூதனா, யான் கொல்லப்படினும் இவர்களைக் கொல்ல விரும்புகிலேன். மூவுலகின் ஆட்சி பெறுதற் கெனினும் (இது செய்யேன்)! பூமியின் பொருட்டுச் செய்வனோ? 35

ஜநார்த்தன! திருதராஷ்டிரக் கூட்டத்தாரைக் கொன்று நாம் என்ன இன்பத்தையடையப் போகிறோம்? இந்தப் பாதகரைக் கொல்வதனால் நம்மைப் பாவமே சாரும். 36

ஆதலால், சுற்றத்தாராகிய திருதராஷ்டிர வர்க்கத் தாரைக் கொல்வது நமக்குத் தகாது, மாதவா, பந்துக் களைக் கொன்ற பின் நாம் இன்புற்றிருப்பதெப்படி? 37

அவாவின் மிகுதியால் அறிவிழந்த இவர்கள் குலத்தையழிப்பதில் விளையும் தீங்கையும், நண்பருக்குச் சதி செய்வதிலுள்ள பாதகத்தையும் காண்கிலராயினும், 38

ஜநார்த்தன, குலநாசத்தால் ஏற்படுங் குற்றத்தை யுணர்ந்த நாம் இப்பாவத்தினின்று விலகும் வழியறியா திருப்பதென்ன? 39

குல நாசத்தால் என்றுமுள்ள குலதர்மங்கள் அழி கின்றன, தர்மம் அழிவதனால் குல முழுதையும் அதர்மம் சூழ்கிறதன்றே? 40

கண்ணா, அதர்மம் சூழ்வதனால் குல ஸ்திரீகள் கெட்டுப் போகிறார்கள். விருஷ்ணி குலத்தோன்றலே, மாதர் கெடுவதனால் வர்ணக் குழப்பமுண்டாகிறது. 41

அக் குழப்பத்தால் குலத்தார்க்கும் அதனை அழித் தார்க்கும் நரகமேற்படுகிறது. இவர்களுடைய பிதிர்க்கள் பிண்டமும் நீருமின்றி வீழ்ச்சி பெறுகிறார்கள். 42

வர்ணக் குழப்பமுண்டாகும்படி குலக் கேடர் செய்யும் இக்குற்றங்களால் ஜாதி தர்மங்களும் தொன்று தொட் டுள்ள குலதர்மங்களும் எடுபட்டுப் போகின்றன. 43

ஜநார்த்தன, குலதர்மங்கள் எடுபட்டுப்போன மனித ருக்கு எக்காலும் நரகத்தில் வாசமென்று கேள்விப் படுகிறோம். 44

அந்தோ! அரசவின்பத்தை விழைந்து சுற்றத்தாரைக் கொல்ல முற்படும் நாம் பெரிய பாவஞ்செய்யத் தலைப் பட்டோம்! 45

கையிலாயுதமில்லாமல், எதிர்க்காமல் நிற்குமென்னை இந்த திருதராஷ்டிரக் கூட்டத்தார் ஆயுதபாணிகளாய்ப் போரில் மடித்துவிடினும் அது எனக்குப் பெரிய நன்மையே யாம். 46

சஞ்ஜயன் சொல்லுகிறான் :—

செருக்களத்தில் இவ்வாறு சொல்லிவிட்டுப் பார்த்தன் அம்புகளையும் வில்லையும் எறிந்து போட்டுத் துயரில் மூழ்கிய மனத்தனாய்த் தேர்ப் பீடத்தின் மேலுட்கார்ந்து கொண்டான். 47



போர்புரிய மனம் வராமல் திகைத்துத் தன்னைச் சரணடைந்த அர்ஜுனனை நோக்கிக் கண்ணன் உரைக்கின்றான் :— " அர்ஜுனா, நீ வருந்துவது முற்றிலும் தவறு. எதிரிகளின் ஆன்மாவைப்பற்றி வருந்துகின்றாயா, அல்லது அவர்களின் உடலைப்பற்றி வருந்துகின்றாயா ? இரண்டும் சரியல்ல. ஆன்மா என்றும் அழிவற்றது. அதைக் கத்தியால் வெட்டவும் தீயினால் எரிக்கவும் முடியாது. உடலோ அழியும் இயல்பு வாய்ந்தது. நீ அழிக்காவிடினும் அது தானே அழியவேண்டியதுதான். ஆன்மாவுக்கு ஒருடல் அழிந்ததும், மற்றொருடல் தானே வந்து சேரும் ஆத்மாவின் இயற்கையை எண்ணி உனக்கு ஏற்படுத்தப்பட்ட செயல்களை நீ செய்தே தீரவேண்டும். அச்செயல்களைச் செய்யுங்கால், நாம் செய்யவேண்டியதைச் செய்கிறோம். அதுவும் ஈசுவரப் பிரீதிக்காகவே, என்று எண்ணிச் செய். இதனால் ஆத்மஞானம் பெருகி அதில் நிலைபெற்று நற்கதியடைவாய். ஈசுவரப் பிரீதியைத் தவிர மற்ற பலனைக் கோரினால் சம்சாரக் கட்டிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முடியாது.

சஞ்ஜயன் சொல்லுகிறான் :—

அவ்வண்ணம் இரக்கமிஞ்சியவனாய் நீர் நிரம்பிய சோக விழிகளுடன் வருந்திய அர்ஜுனனை நோக்கி மதுசூதனன் சொல்லுகிறான் :— 1

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான் :—

இந்த முட்டுதலில் இவ்வுள்ளச் சோர்வை நீ எங்கிருந்து பெற்றாய் ? இஃது ஆரியருக்குத் தகாது. வானுலகைத் தடுப்பது; அபகீர்த்தி தருவது அர்ஜுனா ! 2

பார்த்தா, பேடித்தன்மையடையாதே ! இது நினக்குப் பொருந்தாது. இழிபட்ட மனத் தளர்ச்சியை நீக்கி எழுந்து நில் ; பகைவரைச் சுடுவோனே ! 3

அர்ஜுனன் சொல்லுகிருன் :—

மதுசூதனு, பீஷ்மனேயும், துரோணனேயும் போரில் அம்புகளால் எப்படி எதிர்ப்பேன் ? இவர்கள் தொழுதற் குரியர் ; பகைவரையழிப்போய் ! 4

பெரியோராகிய குருக்களேக் கொல்லாமல், உலகத்தில் பிச்சையெடுத்துண்பதும் நன்று. பொருளே விரும்பும் குருக்களேக் கொன்று நாம் துய்க்கும் இன்பங்கள் உதிரத்திற் (ரத்தத்தில்) கலந்தனவாம். 5

மேலும், நாம் இவர்களே வெல்லுதல், இவர்கள் நம்மை வெல்லுதல்—இவற்றுள் எது நமக்கு மேன்மை யென்பது விளங்கவில்லே. எவரைக் கொன்றபின் நாம் உயிர் கொண்டு வாழ விரும்போமோ, அத்தகைய திருதராஷ்டிரக் கூட்டத்தார் போர் முனேயில் வந்து நிற்கிருர்கள். 6

சிறுமையாகிய குறையால் இயல்பு அழிந்தவனுய், அறம் இன்னது என்றுணராமல் மயங்கிய அறிவுடன், யான் உன்னேக் கேட்கிறேன். எது நன்றென்பதை எனக்கு நிச்சயப்படுத்திச் சொல்லுக. நான் உன் சீடன். உன்னேயே சரணமெனப் புகுந்தேன். கட்டளே தருக. 7

பூமியின் மேல் நிகரில்லாத செல்வமுடைய ராஜ்யம் பெறினும், அன்றி வானோர் மிசை ஆட்சி பெறினும் புலன்களே அடக்கும் இயல்புடைய இந்தத் துயர் எம்மைவிட்டு நீங்குமென்று தோன்றவில்லே. 8

சஞ்ஜயன் சொல்லுகிருன்.:—

“ பகைவரைக் கொளுத்தும் பார்த்தனங்கு
பசுங்கிரை காக்கும் பகைவனே நோக்கிப்
“ போரினிப் புரியேன் ” என்று
வாய் புதைத்திருந்தான்.”

9

பாரதா, அப்போது கண்ணன் புன்னகை பூத்து, இரண்டு படைகளுக்கும் நடுவே துயருற்று நின்ற பார்த்தனை நோக்கி இவ்வசனமுரைக்கிறான் :— 10

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான் :—

" துயர்ப் படத்தகாதார் பொருட்டுத்
துயர்ப் படுகின்றாய்.
ஞான வுரைகளு முரைக்கிறாய் !
இறந்தார்க் கேனும் இருந்தார்க் கேனுந்
துயர் கொளார் அறிஞர்." 11

இதன் முன் எக்காலத்திலும் நான் இல்லாதிருந்திலேன். நீயும் இங்குள்ள வேந்தர் யாவரும் அப்படியே. இனி நாம் என்றைக்கும் இல்லாமற்போகவும் மாட்டோம். 12

ஆத்மாவுக்கு இவ்வுடலில் எங்ஙனம் பிள்ளைப் பிராயமும், இளமையும், மூப்புந் தோன்றுகின்றனவோ, அங்ஙனமே மற்றொரு சரீரப் பிறப்புந் தோன்றுகிறது. தீரன் அதில் கலங்கமாட்டான். 13

குந்தியின் மகனே, குளிரையும் வெப்பத்தையும், இன்பத்தையும் துன்பத்தையும் தரும் இயற்கையின் தீண்டுதல்கள் தோன்றி மறையும் இயல்புடையன, என்று மிருப்பனவல்ல. பாரதா, அவற்றைப் பொறுத்துக்கொள். 14

யாவன் இவற்றால் துயர்ப்படான், இன்பமுந் துன்பமு நிகரெனக் கொள்வான், அந்த தீரன், சாகாதிருக்கத் தகுவான். 15

இல்லாதது உண்மை யாகாது. உள்ளது இல்லாததாகாது. உண்மையறிவார் இவ் விரண்டுக்குமுள்ள வேற்றுமை யுணர்வார். 16

இவ்வுலக முழுதிலும் பரந்து நிற்கும் பொருள் அழி வற்றதென்றறி; இது கேடற்றது; இதனை யழித்தல் யார்க்கும் இயலாது. 17

ஆத்மா நித்தியன்; அழிவற்றான்; அளவிடத் தகாதான். எனினும் அவனுடைய வடிவங்கள் இறுதி யுடையன என்பர். ஆதலால் பாரதா, போர் செய். 18

இவன் கொல்வானென்று நினைப்போனும், கொல்லப் படுவானென்று நினைப்போனும்—இருவரும் அறியாதார். இவன் கொல்லுவதுமில்லை, கொலையுண்பதுமில்லை. 19

இவன் பிறப்பது மில்லை; எக்காலத்திலும் இறப்பது மில்லை. இவன் ஒரு முறையிருந்து பின்னர் இல்லாது போவது மில்லை. இவன் பிறப்பற்றான்; அனவரதன். இவன் சாசுவதன்; பழையோன்; உடம்பு கொல்லப் படுகையில் இவன் கொல்லப்படான். 20

இப்பொருள் அழிவற்றது, பிறப்பற்றது, என்று முளது—இங்ஙன முணர்வான் கொல்வதெவனை? அவன் கொல்விப்பதெவனை? 21

நைந்த துணிகளைக் கழற்றி யெறிந்துவிட்டு மனிதன் புதிய துணிகள் கொள்ளுமாறு போல, ஆத்மா நைந்த உடல்களைக் களைந்து புதியனவற்றை எய்துகிறான். 22

இவனை ஆயுதங்கள் வெட்ட மாட்டா; தீ எரிக்காது, நீர் இவனை நனைக்காது. காற்று உலர்த்தாது. 23

பிளத்தற் கரியவன்; எரித்தற்கும், நனைத்தற்கும், உலர்த்துதற்கும் அரியவன்; நித்தியன்; எங்கும் நிறைந் தவன், உறுதியுடையான். அசையாதான். என்று மிருப்பான். 24

"தெளிதற் கரியான் சிந்தனைக் கரியான்
மாறுத லில்லாதா னென்ப!
ஆதலால் இவனை இங்ஙனம் அறிந்து நீ
துயர்ப் படா திருக்கக் கடவாய்." 25

அன்றி, நீ இவனை நித்தமும் பிறந்து நித்தமும் மடிவானென்று கருதினால், அப்போதும், பெருந் தோளுடையாய், நீ இவன் பொருட்டுத் துயருறல் தகாது. 26

பிறந்தவன் சாவது உறுதியெனில், செத்தவன் பிறப்பது உறுதியெனில், இந்த விலக்கொணாச் செய்திக்கு நீ அழுங்குதல் தகுதியன்று. 27

பாரதா, உயிர்களின் ஆரம்பம் தெளிவில்லை; நடுநிலைமை தெளிவுடையது; இவற்றின் இறுதியுந் தெளிவில்லை. இதில் துயர்ப்படுவதென்னே? 28

இந்த ஆத்மாவை,

"வியப்பென ஒருவன் காண்கிறான்,
வியப்பென ஒருவன் சொல்லுகிறான்,
வியப்பென ஒருவன் கேட்கிறான்,
கேட்கினும், இதனை அறிவான் எவனுமிலன்." 29

பாரதா, எல்லாருடம்பிலுமுள்ள இந்த ஆத்மா கொல்ல முடியாதவன், ஆதலால் நீ எந்த உயிரின் பொருட்டும் வருந்துதல் வேண்டா! 30

ஸ்வதர்மத்தைக் கருதியும் நீ நடுங்குதல் இசையாது. அறப் போரைக் காட்டிலும் உயர்ந்ததொரு நன்மை மன்னர்க்கில்லை. 31

தானே வந்தெய்துவது ; திறந்து கிடக்கும் பொன்னுலக வாயில் போன்றது. இத்தகைய போர் கிடைக்கப் பெறும் மன்னர் இன்பமுடையார் ! 32

அன்றி நீ இந்தத் தர்ம யுத்தத்தை நடத்தாமல் விடுவாயானல், அதனல் ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் கொன்று பாவத்தை யடைவாய். 33

உலகத்தார் உனக்கு மாருத வசையுமுரைப்பார்கள். புகழ் கொண்டோன் பின்னரெய்தும் அபகீர்த்தி மரணத்திலுங் கொடிதன்றே ? 34

நீ அச்சத்தால் போரை விட்டு விலகியதாக மகாரதர் கருதுவார்கள். அவர்களுடைய நன்மதிப்பைப் பெற்ற நீ இதனல் சிறுமை யடைவாய். 35

உனக்கு வேண்டாதார் சொல்லத் தகாத வார்த்தைகள் பல சொல்லுவார்கள். உன் திறமையைப் பழிப்பார்கள். இதைக் காட்டிலும் அதிகமான துன்பமெது ? 36

கொல்லப் படினே வானுல கெய்துவாய். வென்ருல் பூமியாள்வாய். ஆதலால் போர் செயத் துணிந்து நீ எழுந்து நில். 37

இன்பம், துன்பம், இழவு, பேறு, வெற்றி, தோல்வி, இவற்றை நிகரெனக்கொண்டு, நீ போர்க்கொருப்படுக இவ்வணம் புரிந்தால் பாவமெய்தாய். 38

இங்ஙனம் உனக்கு சாங்கிய வழிப்படி புத்தி சொன்னேன். இனி யோக வழியால் சொல்லுகிறேன்'; கேள். இந்தப் புத்தி கொண்டவன் கர்மத் தளைகளைச் சிதறி விடுவான். 39

இதில் முயற்சிக்கு அழிவில்லை. இது வரம்பு மீறிய செயற்கையுமன்று. இந்தத் தர்மத்தில் சிறிதிருப்பினும், அஃதொருவனைப் பேரச்சத்தினின்று காப்பாற்றும். 40

குருகுலத் தோன்றலே! உறுதியுடைய புத்தி இவ்வுலகத்தில் ஒருமையுடையது. உறுதியில்லாதோரின் மதி பல கிளைப்பட்டது, முடிவற்றது. 41

வேதங்களின் வெளியுரையில் மகிழ்வார் சிலர், பூக்களைப் போன்ற (அலங்காரச்) சொற்கள் பேசுகிறார்கள். தமது கொள்கையொழிய மற்றது பிழையென்கிறார்கள். 42

இவர்கள் காமிகள், சுவர்க்கத்தைப் பரமாகக் கொண்டோர். பிறப்புக்கும் தொழிலுக்கும் பயன் வேண்டுவோர்; போகத்தையும் ஆட்சியையும் வேண்டுவோர்; பலவகையான கிரியைகளைக் காட்டிப் பேசுகிறார்கள். 43

இவர்கள் சொல்லுவதைக் கேட்டு மதிமயங்கி போகத்திலும் ஆட்சியிலும் பற்றுறுவோருடைய நிச்சய புத்தி சமாதியில் நிலை பெறாது. 44

மூன்று குணங்களுக்குட்பட்டனவற்றைக் குறித்து வேதங்கள் பேசுகின்றன. அர்ஜுனா, நீ மூன்று குணங்களையுங் கடந்தோனாகுக. *இருமைகளற்று, எப்போதும் உண்மையில் நின்று, யோக க்ஷேமங்களைக் கருதாமல், ஆத்மாவை வசப்படுத்தியவனாகுக. 45

---

*இருமைகள் : நன்மை தீமை, ஒளி இருள், குளிர் வெப்பம் போன்ற இரட்டை நிலைகள்.

எங்கும் நீர் நிரம்பிய இடத்தில் ஒரு சிறு குட்டம் என்ன பொருளுடையது; அன்ன பொருளே ஞானமுடைய பிராமணனுக்கு வேதங்களுமுடையன. 46

தொழில் செய்யத்தான் உனக்கு அதிகாரமுண்டு. அதன் பயன்களில் எப்போதுமே உனக்கதிகாரமில்லை. செய்கையின் பயனைக் கருதாதே; தொழில் செய்யாமலுமிராதே. 47

தனஞ்ஜயா, யோகத்தில் நின்று, பற்றை நீக்கி, வெற்றி தோல்விகளை நிகரெனக்கொண்டு தொழில்களைச் செய்க. நடுநிலையே யோகமெனப்படும். 48

தனஞ்ஜயா, *புத்தி யோகத்தைக் காட்டிலும் கர்மம் நெடுந்தொலை தாழ்ந்தது. புத்தியைச் சரணடை. பயனைக் கருதுவோர் லோபிகள். 49

புத்தி யுடையவன் இங்கு நற்செய்கை தீச்செய்கை இரண்டையுந் துறக்கிறான். ஆதலால் நீ யோகத்திலே பொருந்திவிடு. யோகம் செயல்களில் திறமையாம். 50

புத்தியுடைய மேதாவிகள் செய்கையில் விளையும் பயனைத் துறந்து, பிறவித் தளை நீங்கி, ஆனந்தப்பதவி அடைகிறார்கள். 51

உனது புத்தி மோகக் குழப்பத்தைக் கடந்து செல்லுமாயின், அப்போது கேட்கப்போவது கேட்கப்பட்டது என்ற இரண்டிலும் உனக்கு வேதனை யேற்படாது. 52

உனது புத்தி கேள்வியிலே கலக்கமுறாததாய், உறுதி கொண்டு, சமாதி நிலையில் அசையாது நிற்குமாயின், அப்போது யோகத்தை அடைவாய். 53

* புத்தி யோகம்—புத்தியில் லயித்து நிற்றல், கர்மம்—தொழில்.

அர்ஜுனன் சொல்லுகிருன் :—

கேசவா, உறுதிகொண்ட அறிவுடன் சமாதியில் நிற்போன் எவ்வாறு பேசுவான் ? ஸ்திர புத்தியுடையவன் என்ன சொல்வான் ? எப்படியிருப்பான் ? எதனை யடைவான் ? 54

ஸ்ரீ பகவான் சொல்லுகிருன் :—

பார்த்தா, ஒருவன் தன் மனதில் எழும் விருப்பங்க ளனைத்தையும் துறந்து தன்னிலே தான் மகிழ்ச்சி பெறு வானுயின், அப்போது ஸ்திர புத்தியுடையவனென்று சொல்லப்படுகிருன். 55

" துன்பங் களிலே மனங்கெடா தவனுய்,
இன்பங் களிலே ஆவலற் றவனுய்,
அச்சமும் சினமுந் தவிர்த்தவ னுயின்,
அம்முனி,
மதியிலே யுறுதி வாய்ந்தவ னென்ப." 56

எவன் நல்லதும் கெட்டதும் வருமிடத்தே எதனிலும் வீழ்ச்சியற்றவனுய், ஆவலுறுவதும் பகைப்பதுமின்றி யிருப்பானே, அவனுடைய அறிவே நிலை கொண்டது. 57

ஆமை தன் அவயவங்களை இழுத்துக் கொள்ளுவது போல், எப்புறத்தும் விஷய பதார்த்தங்களினின்று புலன்களையொருவன் மீட்க வல்லானுயின், அவனறிவே நிலைகொண்டது. 58

தம்மைக் கவராத ஜீவனிடமிருந்து விஷயங்கள் தாமே விலகிக்கொள்ளுகின்றன. எனினும் அவற்றிட முள்ள சுவையை இவன் மறப்பதில்லை. பரம் பொருளைக் காண்பானுயின் அச்சுவையுந் தீர்ந்துவிடும். 59

குந்தியின் மகனே, (தவ) முயற்சியுடைய புருஷனிடத்திலேகூட இந்திரியங்கள் வரம்பு கடந்து செல்லும்போது தம்முடன் மனத்தையும் வலிய வாரிச் செல்கின்றன. 60

அவற்றையெல்லாம் நன்ருக அடக்கி, யோகத்தில் அமர்ந்தவனாய், என்னைப் பரமாகக் கொண்டு, புலன்களை வசப்படுத்தி வைத்திருப்பவன் எவனே, அவனுடைய அறிவே நிலைகொண்டது. 61

மனிதன் விஷயங்களைக் கருதும்போது அவற்றில் பற்றுதலுண்டாகிறது. பற்றுதலால் விருப்பமுண்டாகிறது. விருப்பத்தால் சினம் பிறக்கிறது. 62

சினத்தால் மயக்கம்; மயக்கத்தால் நினைவுத் தவறுதல்; நினைவுத் தவறுதலால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் அழிகிருன். 63

விழைதலும் பகைத்தலுமின்றித் தனக்கு வசப்பட்ட புலன்களுடன் விஷயங்களிலே ஊடாடுவோனாய்த் தன் விதிக்குத் தான் உட்பட்ட மனிதன் ஆறுதலடைகிருன். 64

சாந்தி நிலையில் மனிதனுக்கு எல்லாத் துன்பங்களும் அழிகின்றன. சித்தம் சாந்தி பெற்ற பின் ஒருவனுடைய புத்தி விரைவிலே நிலைப்படுகிறது. 65

யோகமில்லாதவனுக்குப் புத்தியில்லை. யோகமில்லாதவனுக்கு மனோ பாவனை யில்லை. மனோ பாவனை யில்லாதவனுக்குச் சாந்தியில்லை. சாந்தி யில்லாதவனுக்கு இன்பமேது? 66

இந்திரியங்கள் சலிக்கையில் ஒருவனுடைய மனமும் அவற்றைப் பின்பற்றிச் செல்லுமாயின், அம்மனம் கடலின் தோணியைக் காற்று மோதுவதுபோல் அறிவை மோதுகிறது. 67

ஆதலால், பெருந்தோளாய், யாங்கணும் விஷயங்களினின்றும் இந்திரியங்களைக் கட்டவல்லான் எவனோ, அவனறிவே நிலைகொண்டது. 68

எல்லா உயிர்களுக்கும் இரவாகிய நேரத்தில், (தன்னைக் கட்டிய) முனி விழித்திருக்கிறான். மற்ற உயிர்கள் விழித்திருக்கும் நேரமெதுவோ அதுவே முனிக்கிரவு. 69

கடலில் நீர்த் தொகுதிகள் வந்து விழுகையில் அது மேன்மேலும் நிரப்புதற்குரிதாய் அசையா நிலை கொண்டிருப்பது போலே விருப்பங்கள் தன்னுள்ளே புகும போது இயல்வான் எவனோ அவன் சாந்தியடைகிறான். விருப்பங்களை விரும்புவோன் அதனை அடையான். 70

இச்சையற்றான், எல்லா இன்பங்களையும் துறந்தான், எனதென்பதற்றான், யானென்பதற்றான், அவனே சாந்தி நிலை அடைகிறான். 71

பார்த்தா, இது பிரம்ம ஸ்திதி. இதையடைந்தோன் பிறகு மயங்குவதில்லை. இறுதிக் காலத்திலேனும் இதில் நிலைகொள்வோன் பிரம்ம நிர்வாணமெய்துகிறான். 72



கர்ம யோக ஞான யோகங்களுள் ஞான யோகமே கடுகப் பலனை அளிக்குமென்றாலும் கர்மயோகமே செய்யத் தக்கது. ஆக்கையிருக்கும் வரையில் மனிதனுக்கு ஏதாவதொரு தொழிலைச் செய்வதே இயற்கையாயிருக்கும். அவன் துணிந்து வேறு துறைகளிலிழிந்த போதிலும் புலன்கள் அவனை இழுத்துச் செய்கையிலேயே கொண்டு வந்து நிறுத்தும். இந்திரியங்களை அடக்கி ஞான நிலையில் நிற்கும் திறமை வாய்ந்தவனும் கர்மங்களையே செய்யக் கடவன். ஏனெனில், இவனது உண்மை நிலையறியாத பாமரர்களும் இவனைக் கண்டு தாங்களும் கர்மங்களைவிட்டு ஞானத்துறையில் துணிவுறுவார்கள். அதனால் அவர்கள் கர்மயோகத்தையிழந்ததுமன்றி ஞானயோகத்தையுமிழந்து முன்னிலும் தாழ்ந்த நிலைமைக்கு வந்துவிடுவார்கள். அவர்கள் கெடுவதற்கு இவனே காரணமாவான். ஆகையால் ஞான யோகத்தில் திறமையுள்ளவனுக்கும் திறமையில்லாதவனுக்கும் கர்ம யோகமே மேலானது. கர்மங்களைச் செய்யும்போது, ' இந்நிலைமை எனக்கு பிரகிருதி சம்பந்தத்தால் வந்தேறியதென்றும் ஈசுவரனுடைய கட்டளையினால் அவனுதவியைக் கொண்டு அவனுடைய பிரீதிக்காகவே செய்கிறேம்,' என்றும் எண்ணிச் செய்ய வேண்டும்.

அர்ஜுனன் சொல்லுகிறான் :—

ஜநார்த்தன, செய்கையைக் காட்டிலும் புத்தியே சிறந்ததென்பது நின் கொள்கையாயின் இந்தக் கொடிய செய்கையில் என்னைப் புகுத்துவதென்னே, கேசவா ? 1

குழப்பமான பேச்சினால் என் புத்தியை மயங்கச் செய்கிறாய். ஆதலால் எது எனக்கு நன்மை தருமென்பதை உறுதிப்படுத்தி ஒரே வார்த்தையாகச் சொல். 2

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான் :—

பாபமொன்று மில்லாத அர்ஜுன, இவ்வுலகத்தில் இரண்டுவித நிஷ்டை முன்னர் என்னாற் கூறப்பட்டது. சாங்கியர்களின் ஞான யோகத்தால் எய்துவது, யோகிகளின் கர்ம யோகத்தால் எய்துவது என. 3

தொழில்களைத் தொடாமலே யிருப்பதனால் மனிதன் செயலற்ற நிலை அடைவதில்லை. துறவினாலேயே மனிதன் ஈடேற்றம் பெற்றுவிடமாட்டான். 4

எவனும் ஒரு கணப்பொழுதேனும் செய்கையின் றிருப்பதில்லை. இயற்கையில் விளையும் குணங்களே எல்லா உயிர்களையும் அவசரமாகத் தொழில் புரிவிக்கின்றன. 5

கர்மேந்திரியங்களை அடக்கிக்கொண்டு, ஆனால், இந்திரிய விஷயங்களை மனதால் ஸ்மரித்துக் கொண்டிருப்போனாகிய மூடாத்மா பொய்யொழுக்கமுடையவனென்று சொல்லப்படுகிறான். 6

அர்ஜுனா, எவன் இந்திரியங்களை மனதால் கட்டுப்படுத்திக்கொண்டு, கர்மேந்திரியங்களால் கர்மயோகம் பண்ணுகிறானோ, அவன் சிறந்தவன். 7

விதிக்கப்பட்ட தொழிலை நீ செய். தொழில் தொழிலின்மையைக் காட்டிலும் சிறந்ததன்றோ ? தொழிலின்றி இருப்பதால் உடம்பைக் கொண்டு செலுத்துதல்கூட உனக்கியலாமல் போய்விடும். 8

வேள்வியின் பொருட்டென்று செய்யப்படுவது தவிர மற்றைத் தொழில் மனிதருக்குத் தளையாகிறது. ஆதலால், குந்தி மகனே, பற்றைக் களைந்து தொழில் செய்து கொண்டிரு. 9

முன்பு பிரம்மதேவன் வேள்வியுடனே உயிர்க் குலத்தை ஒருமிக்கப் படைத்துச் சொல்லினன் : "இதனால் பல்குவீர்கள், நீங்கள் விரும்பும் விருப்பங்களையெல்லாம் உங்களுக்கிது கறந்து தரும்." 10

இதனால் தேவர்களைக் கருதக் கடவீர் ; அந்த தேவர் உங்களைக் கருதக் கடவர். (இங்ஙனம்) பரஸ்பரமான பாவனை செய்வதனால் உயர்ந்த நலத்தை எய்துவீர்கள். 11

வேள்வியில் பாவனை செய்யப்பட்ட தேவர் உங்களுக்கு விரும்பிய போகங்களையெல்லாந் தருவர். அவர்களுக்குக் கைமாறு செலுத்தாமல் அவர்கள் கொடுப்பதை உண்போன் கள்வனேயாவான். 12

வேள்வியின் மிச்சத்தை யுண்ணும் நல்லோர் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள். தம்பொருட்டென்று மாத்திரமே உணவு சமைக்கும் பாவிகள் பாவத்தை உண்ணுகிறார்கள். 13

அன்னத்தால் உயிர்கள் சமைகின்றன. மழையால் உணவு தோன்றுகிறது. மழை வேள்வியால் ஆகிறது. வேள்வி செய்கையினின்று பிறப்பது. 14

செய்கை பிரம்மத்தினின்றும் பிறப்பதென்றுணர். பிரம்மம் அமிர்தத்தில் தோன்றுவது. ஆதலால் எங்கும் நிறைந்த பிரம்மம் எப்போதும் வேள்வியில் நிலை பெற்றது. 15

இங்ஙனம் சுழலும் வட்டத்தை இவ்வுலகில் பின்பற்றி ஒழுகாதோன் பாபவாழ்க்கையுடையான், புலன்களிலே களித்தான் ; பார்த்தா, அவன் வாழ்க்கை விழலேயாம். 16

தன்னிலே தான் இன்புறுவான், தன்னிலே தான் திருப்தியடைவான், தன்னிலே தான் மகிழ்ந்திருப்பான், அவனுக்குத் தொழிலில்லை. 17

அவனுக்குச் செய்கையில் யாதொரு பயனுமில்லை; செயலின்றி இருப்பதிலும் அவனுக்குப் பயனில்லை, எவ்விதப் பயனையுங் கருதி அவன் எந்த உயிரையுஞ் சார்ந்து நிற்பதில்லை. 18

ஆதலால் எப்போதும் பற்று நீங்கிச் செய்யத்தக்க தொழிலைச் செய்துகொண்டிரு. பற்றில்லாமல் தொழில் செய்துகொண்டிருக்கும் மனிதன் பரம்பொருளை எய்துகிறான். 19

ஜனகன் முதலியோர் செய்கையாலேயே சித்தி பெற்றார்கள். உலக நன்மையைக் கருதியும் நீ தொழில் புரிதல் தகும். 20

எதனையெதனை உயர்ந்தோன் செய்கிறானோ, அதையே மற்ற மனிதர் பின்பற்றுகிறார்கள். அவன் எதை பிரமாணமாக்குகிறானோ, அதையே உலகத்தார் தொடருகிறார்கள். 21

பார்த்தா, மூன்றுலகத்திலும் எனக்கு யாதொரு கடமையுமில்லை. நான் பெற்றிராத பேறுமில்லை. எனினும் நான் தொழிலிலேதான் இயங்குகிறேன். 22

நான் சோம்பரில்லாமல் எப்போதும் தொழில் செய்து கொண்டிராவிடின், பார்த்தா, எல்லாப் பக்கங்களிலும் மனிதர் என் வழியையே பின்பற்றுவார்கள். 23

நான் தொழில் செய்யாவிட்டால், இந்த ஜனங்களெல்லோரும் அழிந்துபோவார்கள்; குழப்பத்தை நான் ஆக்கியோன் ஆவேன்; இந்த மக்களையெல்லாங் கொல்வோனாவேன். 24

பாரதா, அறிவில்லாதார் செய்கையில் பற்றுடையோ ராய் எப்படித் தொழில் செய்கிருர்களோ அப்படியே அறி வுடையோன் பற்றை நீக்கி உலக நன்மையை நாடித் தொழில் செய்ய வேண்டும். 25

அறிவுடையோன் தொழிலிற் பற்றுதல் கொண்ட அஞ்ஞானிகளுக்கு புத்தி பேதம் விளைவிக்கக்கூடாது. அவன் யோகத்தில் நின்று தொழில் செய்து எல்லாத் தொழில்களையும் கவர்ச்சியுடையனவாக்க வேண்டும். 26

எங்கும் தொழில்கள் இயற்கையின் குணங்களால் செய்யப்படுகின்றன. அகங்காரத்தால் மயங்கியவன், "நான் செய்கிறேன்" என்று நினைக்கிருன். 27

குணம், செய்கை இவற்றுடைய பிரிவுகளின் உண்மை யறிந்தோன், 'குணங்கள் குணங்களில் இயலுகின்றன' என்று கருதிப் பற்றற்றிருப்பான். 28

இயற்கையில் குணங்களால் மயங்கியவர்கள் குணங் களிலும் தொழில்களிலும் பற்றுதலடைகிருர்கள். சிற்றறி வுடைய அந்த மந்தர்களை முழுதுணர்ந்த ஞானி உழல் விக்கக்கூடாது. 29

எல்லாச் செய்கைகளையும் உள்ளறிவிஞல் எனக்கு அர்ப்பணமாகத் துறந்துவிட்டு, ஆசை நீங்கி, எனது என்பது அற்று, மனக் காய்ச்சல் தீர்ந்தவனுய்ப் போர் செய்யக்கடவாய். 30

என்னுடைய இந்த நித்தியமான கொள்கையை எந்த மனிதர் சிரத்தையுடையோராய்ப் பொருமையின்றிப் பின்பற்றுகிருர்களோ, அவர்களும் தொழில்களிலிருந்து விடுபடுகிருர்கள். 31

என்னுடைய இக்கொள்கையை யாவர் பொருமையால் பின்பற்ருது விடுகிருர்களோ, எவ்வித ஞானமுமில்லாத அம்மூடர்களை நாசமடைந்தோராகவே தெரிந்து கொள். 32

ஞானமுடையவன் கூடத் தன் இயற்கைக்குத் தக்கபடியே நடக்கிருன். உயிர்கள் இயற்கைப்படி நடக்கின்றன. அடக்குதல் பயன்படாது. 33

இந்திரியத்துக்கு இந்திரிய விஷயத்தில் விருப்பு வெறுப்புக்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவ்விரண்டுக்கும் ஒருவன் வசப்படலாகாது. இவை இவனுக்கு வழித்தடைகளாம். 34

நன்ருகச் செய்யப்படும் பர தர்மத்தைக் காட்டிலும் குணமற்றதெனினும் ஸ்வதர்மமே சிறந்தது. ஸ்வதர்மத்தில் இறந்துவிடினும் நன்றேயாம். பர தர்மம் பயத்துக்கிடமானது. 35

அர்ச்சுனன் சொல்லுகிருன் :

விருஷ்ணி குலத் தோன்றலே, மனிதனுக்கு இச்சையில்லாதபோதும் அவனை வலியக்கொண்டு புகுத்துவது போல் தூண்டிப் பாவம் செய்விப்பது யாது? 36

பகவான் சொல்லுகிருன் :

இஃது விருப்பமும் சினமும்; ரஜோ குணத்திற் பிறப்பது; பேரழிவு செய்வது; பெரும்பாவம். இதனை இங்கு சத்துருவாகத் தெரிந்துகொள். 37

புகையினல் தீ சூழப்பட்டிருப்பது போலவும், கண்ணுடி அழுக்கால் மாசு படுவது போலவும், கர்ப்பத்தை கருப்பை சூழ்ந்திருப்பது போலவும் இது இவ்வுலகைச் சூழ்ந்திருக்கிறது. 38

குந்தியின் மகனே, விருப்பமெனப்படும் இந் நிரப் பொணுத் தீ ஞானிக்கு நித்தியப் பகையாம் ஞானத்தைச் சூழ்ந்து நிற்கிறது. 39

இந்திரியங்களும், மனமும், புத்தியும் இதற்கு நிலைக் களன் என்பர். இவற்ருல் இது ஞானத்தைச் சூழ்ந்து மனிதனை மயங்குவிக்கிறது. 40

ஆதலால் பாரத ரேறே, நீ தொடக்கத்தில் இந்திரியங் களைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஞானத்தையும் விஞ் ஞானத்தையும் அழிப்பதாகிய இந்தப் பாவத்தைக் கொன்றுவிடு. 41

இந்திரியங்களை உயர்வுடையனவென்பர். அவற் றிலும் மனம் மேல்; மனத்தைக் காட்டிலும் புத்தி மேல்; புத்திக்கு மேலே அவன் (ஆத்மா). 42

இங்ஙனம் புத்திக்கு மேலான பொருளை (ஆத்மாவை) உணர்ந்து, தன்னைத்தான் உறுதிப் படுத்திக்கொண்டு, வெல்லற்கரிய விருப்பமாம் பகையைக் கொல்லக் கடவாய், பெருந்தோளுடையாய்! 43



'அர்ஜுனா, உன்னை ஏமாற்றிச் சண்டையில் உற்சாகமூட்டுவதற்காக உன்னைக் கர்ம யோகத்தில் தூண்டுகிறேன் என்று எண்ணாதே. உலகத்தைப் படைக்கும்போதே இக்கர்ம யோகத்தை நான் மனுவுக்கு உபதேசித்தேன். பிறகு மனுவின் வழியாக உலகில் அது பரவிற்று' என்று சொல்லிக் கண்ணன் தமது அவதார ரகசியத்தைக் கூறுகிறார். பிறகு கர்ம யோகத்தின் பிரிவுகளையும் அவற்றுள்ளடங்கிய ஆத்ம ஞானத்தின் பெருமையையும் விளக்குகிறார். கர்ம யோகம் ஞான பாகத்தை உள்ளடக்கிக் கொண்டிருப்பதால் அதுவே ஞான யோகத்தின் பலனையும் அளிக்கும் என்று கூறுகிறார்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான் :

இந்த அழிவற்ற யோகத்தை நான் முன்னர் விவஸ்வானுக்குச் சொன்னேன். விவஸ்வான் மனுவுக்குச் சொன்னான். மனு இக்ஷ்வாகு ராஜனுக்குக் கூறினான். 1

இவ்வாறு பரம்பரையாகக் கிடைத்த இதனை ராஜரிஷிகள் உணர்ந்திருந்தனர். பரந்தபா, அந்த யோகம் கால மிகுதியால் இவ்வுலகத்தில் இழக்கப்பட்டது. 2

அந்தப் பழைய யோகத்தையே இன்று நான் உனக்குச் சொன்னேன், நீ என் பக்தனும் தோழனுமென்பது கருதி. இது மிகவும் உயர்ந்த ரகசியம். 3

அர்ஜுனன் சொல்லுகிறான் :

உன் பிறப்புப் பிந்தியது ; விவஸ்வானுடைய பிறப்பு முந்தியது. நீ இதை ஆதியில் சொன்னவனென்று நான் தெரிந்து கொள்வதெப்படி ? 4

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான் :

அர்ச்சுனா, எனக்குப் பல ஜன்மங்கள் கழிந்திருக்கின்றன. உனக்கும் அப்படியே, பரந்தபா, நான் அவற்றை எல்லாம் அறிவேன் ; நீ அவற்றை அறிகிலை. 5

பிறப்பற்றோனெனினும், அழிவற்றோனெனினும், உயிர்களுக்கெல்லாம் ஈசனே யெனினும், யான் எனது பிரகிருதியில் நிலைபெற்று ஆத்ம மாயையால் பிறப்பெய்துகிறேன். 6

பாரதா, எப்போதெப்போது தர்மம் அழிந்துபோய் அதர்மம் எழுச்சி பெறுமோ, அப்போது நான் என்னைப் பிறப்பித்துக் கொள்ளுகிறேன். 7

நல்லோரைக் காக்கவும், தீயன செய்வோரை அழிக்கவும், அறத்தை நிலை நிறுத்தவும் நான் யுகந்தோறும் பிறக்கிறேன். 8

எனது தெய்வத்தன்மை கொண்ட பிறப்பும் செய்கையும் இங்ஙனமென்பதை உள்ளபடி யுணர்வோன் உடலைத் துறந்த பின்னர் மறு பிறப்பு எய்துவதில்லை. அர்ஜுனா ! அவன் என்னை எய்துகிறான். 9

விருப்பத்தையும், அச்சத்தையும் சினத்தையும் துறந்தோராய், என் மயமாய், என்னை அடைக்கலம் புகுந்து ஞானத்தவத்தால் தூய்மைபெற்று என்னியல்பு எய்தினோர் பலர். 10

